அந்தைய வுருவுற்ற வரனாதி மூவர்களு மரியபணி செய்தா
ணையா லாடவர்க ளாகியே முத்தொழிலு மேற்றுவா ராகு
மிவை காண்பிப்பபோல் ;

அந்தரள செம்பவள மணிநீல வம்மானை யம்மைநீ யாடி
யருளே, ஆரூறி லொன்றாகி யகமருவு சுந்தரீ யம்மானை
யாடியருளே. (1)

மத்தனு மகிடனைக் கொன்றிடும கத்தான மாலக்கு மித்தே
வியை, மகிழ்தரச் சுரர்களும் வந்தனைகள் செய்திடவும்
வந்ததென்னென வம்மையே ;

பித்தராஞ் சும்பனுநி சும்பனும் பிரமனிற் பெரிதான வர
முற்றனர் பேசுசோ ணிதபீஜ னுந்தூமி ரக்கண்ணன் பீம
ராஞ் சண்டமுண்டர் ;

அத்தலத் துற்றனர ழித்தனர்க ளென்னவே யம்பிகையுங்
கௌசிகையெனு வாவிர்ப்ப வித்துவெங் காளியா யன்ன
வரை யதமாக்கி யேவீசல்போல்,

அத்தத்தெ டுத்தம்மைபன்மணிகுயின்ற திரு வம்மானை
யாடியருளே, அருவிருத் தக்காவிரிப்புனத் தழகியே யம்
மானை யாடியருளே. (2)

வேறு.

சண்டச்க ளிற்றிநெடு சண்டப்ர சண்டமாய்ச் சண்டித்த
சத்தோனுஞ், சம்சார வெந்தழலில் வெம்பியவிளங்கோவுஞ்
சார்முனிவர் சாற்றியவணம்;

மண்டிக்க டுந்தவஞ் சண்டிசா முண்டிக்கு மாறுதுபேறுகவே,
மங்கலந் தந்துபின் னவனுக்கு மன்னைநின் மாஞான மது
மடுத்தே;

அண்டச்சு ழுக்கணிரை நிரையாக வாற்றியவ் வம்பரத் தேக
விடலும், ஆங்கவற் றைப்பொடித் துத்திங்கள் சூடியும்
மாடியே கோடுமாபோ;

லண்டக் களித்தலுட னழகத்த நித்திலத் தம்மானை யாடி
யருளே ஆடகச் செய்யபுரி வீடகத்துய்யுதரி யம்மானையா
டியருளே. (3)

அமரருத் யானவன மத்தியி லமைத்திட்ட வாடகச் சினக
ரத்தே, யதிபதும ராகவொளி யாகமா யாபரண வகிலபூ
ஷிதையாகியே;

அமர்கரக் காவலரு ளரவகிங் கிணிஜால மமைசாஞ்சி யாரு
மிடையா, யமருகல கண்டீர வாய்காந்த கணகணத் தரி
யகங் கண நூபுராய்,

சிமிமணிக் ரீடந்து லங்குமந் தஸ்மிதாய் திரிநேத்ர கமலாசி
யாய், தெளிவதனியாயளிபி ஞல்விருத் தரனறத் தே
வேந்தி ரற்கருளனு;

யமைவளக் காவிரிப் புனல்விழுப் பதியினு யம்மானை யாடி
யருளே, அமரர்பொற் பதிநிகர்த் தமருபொற் பதியுளா
யம்மானை யாடியருளே. (4)

கருவதூர்க் கமனருந் துயர்தரத் தேவருங் காவருங் கவுரி
யைக் காற், கைதொழப் பதுசகத் திரமெனக் கரமெழக்
காளியே முதலவாக;

வுருவகத் துற்றசத் திகளையுண் டாக்கியே யொழிவித்த சத
பதாக்ஷீ, யும்பரே யெவ்வுழியு மெஞ்ஞான்று மெம்ம
கிமை யோதுவீர் பாதுகாப்பேம்;

சருவவே தாந்தசித் தாந்தசித் தாநந்த சத்தைநந் தெந்தமக்
காய்ச் சந்ததந் தந்ததந் திக்குந்து பார்றனங் கந்தனுக்குந்
தந்ததா ;
யருவமா யந்தமில் லுருவமா மம்மைநீ யம்மானை யாடிய
ருளே, அதிசயத் தமனியக் கமனியச் செங்கரத் தம்மானை
யாடியருளே. (5)

வேறு.

பாசரு பத்தினி ஞன்முக ஞகியர் பலகைச தாசிவமாய்ப்
பஞ்சப்பி ரமத்தி ஞசன ரூடையைப் பார்க்கினுந் தெய்
வமய ;
லோதரு பத்தினி லுண்டுகொல் சீர்புவ னேச்சுரி யாமிவளை
யோருகி லாருமே வீடெனி லம்பர மோர்சரு மக்கடமே ;
சீதரு பத்தினைத் தேவான்ம சத்தியைத் தியானயோ கத்திர
ளாற்றேர்ந்தன ரென்றுசு வேதாசு வதரந் தேருந்திருத்
தேவி ;
வேதரு பத்துத்த வத்திம தனத்தால் வேறுபடக் கிடைத்த,
வேதகி பாதக காதகி யம்மனை வீசியருள் புரியே. (6)

வேறு.

உத்தம சத்திசெம் பொன்பொன் னுங்கரி யுங்கெழ வங்க
மெழி, லுய்விலர் கண்டுநின் மைவிழி யுண்குமொ ருங்கரு
டங்கியிடத் ;
தத்தத வத்தினி னிற்பவு நற்பரை தருவமெ னச்சொலியே,
சதியென லக்குமி யுதியென வைத்தத வைப்பொருள்
வைப்பாவாய் ;

கொத்துப வத்திர ளெத்தனை யெத்தனை கோர்த்தனன்
முற்றினுநின், குறியந கைக்கிரை வைத்தினி யேனுங்கொ
டுந்துயர் சிந்தாயோ;

அத்தம னர்த்தமெ ழிலொழி வானவ ளாடுக வம்மனையே,
அழகுமி குந்தசு வுந்தர நாயகி யாடுக வம்மனையே. (7)

அம்மைய ளித்தவ லங்கல ருந்தவ னம்மனு வுக்கருள வம்
மனு வும்பசு கன்மமிழைத்திட வங்கனை சங்கரன்மேல்;

வெம்மையு தித்திட மங்கலை யுஞ்செல விண்டுவு மண்டுறவே
வெம்பர னும்பல பம்புற வங்கவை விஞ்சிய பீடமெனு;

அம்மையை யிங்கெவன் மந்திரமுந்தவ ருந்தவ மேயமை
வான் அம்பரி லிம்பரி லெம்பரி னும்பல மம்பிகை நம்புக
வென்,

றம்மதி யன்னரு ளம்மணி செம்மணி யாடுக வம்மனையே
அழகுநி றைந்தக லியாணசு வுந்தரி யாடுக வம்மனையே (8)

வேறு.

காசியில்வி சாலாக்ஷி கவுரிமுக வாசினீ கருதுநை மிஷ
லிங்கினீ, கமருபிர யாகையில் லலிதைகா முகிகந்த மாமா
னசங் குமுதையாம்;

ஆசின்மந் தரகாம சாரிணீ கோமந்த கோமதீ யத்தனத்தே,
அருஜயந்தீ கவுரி கான்ய ரம்பா மலய வேகாமிரக் கீர்த்
திபே,

சாசுவத கேதார சன்மார்க்க தாயினி தங்குகோ கர்ண பத்ரே, சைலமா தவிசைல வாராக ஜயை கமலே கமலால யத்திலெனவே ;

ஆசையற் றவர்களுக் கருள்செய்யு மம்மையே யம்மானை யாடி யருளே, அடியனையு நினையுமா றருள்செய்த வழகம்மை யம்மானை யாடியருளே. (9)

திகழுருத் திரகோடி ருத்ராணி காலிகா லஞ்சர்சா லக்கிராம, சீர்மகா தேவிசிவ லிங்கநீர்ப் பிரியைமா லிங்ககபிலா மாயையிற் ;

புகழுங்கு மாரிகயை மங்கலையும் விமலையாம் புருஷோத்த போற்பலாக்ஷி, புகுசகத் திரசுபார் சுவத்திற் ராயணீ கல்யாணி மலயத்தினில் ;

நிகழுவிந் தியைவிந்த்ய வாசினிவி நாயகத் துமையமர கண்ட சண்டீ, நிதிவைசு ரவணமறை காயத்ரி பார்வதீ சிவ நான்மு கன்கலைமகள் ;

அகமதிற் பிரமகலை யாகியே யருளம்மை யம்மானை யாடி யருளே, ஆதியா யளியுடன் பொருள்வையிற் சுந்தரீ யம் மானை யாடியருளே. (10)

எட்டாவது அம்மானைப் பருவம் முற்றிற்று.

---

ஒன்பதாவது

## நீராடற்பருவம்.

---

சதரூபையின் பதியாமனு சருவாணிமங் கலையைச் சததந்
 தவம் விதிதந்தபின் சருக்காதி சமைந்தான்;
புதரூதிய திதிவாரங்கள் புரிவாரருச்சனைகள் புரிதீவினை
 யணுகாதெனப் புகலும்பு னிதையதே;
விதரூபக திருவாகியவ் விரிஞ்சாதிய தேவர் விரும்புபொரு
 ளரும்பும்விழு விமலாம்பிகை யுமையே;
அதிரூதக வலைகாவிரி யமுதாடிநீ யருளே, அடியேன்வினை
 பொடியாயிட வமுதாடிநீ யருளே. (1)

வேறு.

சுந்தரசு வாகையாய்ச் சுதையாகித் தக்கணையின் சொரூப
 மாய்த் தன்றியுலவிச், சுயமனுவின் மைந்தனும் மைந்தனுற
 வுயிரிலது துயரசா கரமூழ்கியே;
வெந்துவரு பூமியதி லேகவுங் கந்தனது விந்தைசெறி தேவ
 சேனை, விரைவினருள் செய்துபின் ஷஷ்டியென நின்றதும்
 வேறொருவ ருண்டாங்கொலோ;
அந்தவமை மாமியா யறிகுறமின் மாமியா யாறுமுக னுக்கு
 மனையாய் அளவிலாக் களவுபொய் வஞ்சகத் தாலயமென்
 னதிபாத கற்குமருளும்;
சிந்துரச் செல்வனையு மீன்றதாய் போன்றவிச் செந்நீரி லாடி
 யருளே, திரிரங்க மருவங்கம் விரிகாவி ரிப்புனற் செல்விநீ
 யாடி யருளே. (2)

மங்களந் தங்குறத் திரிபுரத் தசுரர்தம் வதமுதவ மாதேவ னும், மங்களத் தினமதனின் மகிழ்செயப் பூசையான் மங் களமகிழ்ந் தளித்தே ;

மங்களக் கிரகமும் மங்களநன் மன்னனும் மங்களச் சுந்தரிக ளும், மங்களம் விரும்பியே மங்கள தினத்தினில் மகிழ் தரப் பூசைசெய்ய ;

மங்களச் சண்டிகையென் மருவுநற்பெயருடன் மனநினைப வற்றையருளி, மனுமனுடர் முனியிருடி மன்னர்பொன் னுடர்க்கும் வாஞ்சிதமளிக்கு மெந்தாய் ;

மங்களச் சந்தகில்கள் வாரிவருகாவிரியின் மருவுநீராடி யருளே, மல்குமுக் கனியில்கு மதுவிரவு புதுநீரின் மான சேயாடியருளே. (3)

என்னதான் கண்டிக் குடும்பமென் கானகத் தேழைநாய் போன்மலைந்தேன், எதுக்கு டம்பென்னும் வாதுக்கு டைந்துமிக வித்துயர்ப் பட்டுழன்றேன் ;

மன்னவே யருணனல் வெந்துயர மங்கலே மாகாளி மாலக் குமீ, மாகலைமின் மாற்றென்ன வமரர்கண மோலமிட மாபி ரம ரப்படையினற் ;

சின்னமாய்ப் பின்னமா யசுரர்கண மடியவே சேதித்த சரிதை தன்னைச், சிந்தித்து வந்தித்தன் சித்துருவ மாகியே சேடித்து நிற்பதென்றோ ;

அன்னையாங் கங்கையளு மைப்பசியி லேதோயு மரியகா விரி விரியுநீர், அரியதாத் தெரியவே புரியவே தெரியனுட னம்மைநீ யாடியருளே. (4)

வேறு.

முன்னர்ச்சுரரு மசுரரொடு முயங்கிப்போரின் முறிந்தோட
முதல்வியருள வென்றபின முனைந்து யானயானெனல்
காண ;
அன்னையருள வியக்கனென வாகவனலே முதலாக வரு
மைதெரிய வமரேச ணுங்கே மறைய வஞ்சுதனும் ;
தன்னைத்தொழுக வெனவிண்ணிற் றனிமாமொழிகொண்டிந்
திரனும் தனித்துச்சபித்துக் கண்விழித்துத் தணர விலக்
கம் வருடங்கள் ;
மன்னியருளு மாதேவி மாயாற்றீர்த்த மாடுகவே மனனும்வி
ழியுங் கதுவாத மாதா திருநீராடுகவே. (5)

வேறு.

வந்தவந்த வந்தணரை வந்தனை புரிந்தே, வன்றுயரெ னின்
றிருமி னென்றுரை கரைந்தே ;
சந்தசெனு மந்தனையைச் சந்திமுனி யெந்தாய், சங்கரி பொன்
செங்கரியை யிங்கருளு மங்காய் ;
வெந்துயர நந்தியற வின்றருளு கென்றூன், வெந்தணல துந்
தணிய வந்தணரு மூந்தா ;
அந்தமறு கும்பமது பம்பியரு ளம்பா, வங்கதசவங்கமுற
வாடியருளம்பே. (6)

வேறு.

கருதரிய கலியாணி கமனீய கமலாக்ஷி கனுமஷம றுக்கு
மயிலே, கருணாமு தக்கடல் கலிதோஷ நாசியே கருமாதி
சாக்ஷிகயலே ;
எருதுரியனுயகி யேகாரமாயகி யேகாக்ஷரீ யக்ஷரீ, யேகசுக
போகமே யேஷணூரகிதமே யேகரசமே யரசமே ;

சரிதரிய ரூபமே சச்சிதா நந்தமே சநகாதி முனிபூஜிதே,
சம்பினி குடும்பினீ சகுணநிர்க்குணரூப சர்வபூ ஷணபூ
ஷிதே;
அரிதினும்மரிதான வம்பிகே காவிரியென் றுறுநீ ராடிய
ருளே, அக்கலச முனிகலச வானேநீ ராதலின் னழகிநீ
யாடியருளே. (7)

பார்க்கவ னெனுந்தவன் றத்தமுனி யாணையாற் பன்னிரண்
டாண்டுநோற்றுப் பரமமா மேன்மையிற் சாதனம் விறு
தலும் பரசாது சங்கமன்றிப்;
பார்க்கிலய லில்லையாற் பரையினைக் காணமவ வல்லியைப்
பற்றிநின்ற, படரேம சூடனும் பார்வதியினுருவினைப்
பன்னிபாற் கேட்டுணர்ந்தே;
தீர்க்கமுட னுய்ந்தாய்ந்து தேகாதி நியதியாய்த் தேஜோம
யத்தேவியைத், திரிபைய மின்றியே தெரிசித்து வாழ்ந்
தனன் றெரிகநீ யென்றவனையே;
ஆர்க்கவரு மிருகரந் திரைகளொடு பொருதவே யரியநீ ராடி
யருளே, ஆண்டவர்தம் மடியார்க ளனுதினம் புனிதமுற
வம்மைநீ ராடியருளே. (8)

பரியினெடு மரையனது குமரர்களு மதிகமிகு படபடென
நெடிது வரவே, பயிலுதவ கணனுமிட ரடையுமென மக
னுமக பரிவினெடு பரியையடவே;

யுரியவனு மரியதுதி புரியவரு பரியைவிட வுபருசிலை மகிமை
யுணர்வான், உயருபத மதைவிழைய வுமையினது பதம
தெனவுலகுகன வெனவருளவே;

அரியதவ முயலநிறை திரிபுரையு முளமிளகி யருளமய லக
மொருவியே, அடிகளடை தருமடியை யடியனடை வுற
மடமை யறநெரிய வணவிமணமே ;

அரியினொடு மரனுமறி வயனுமென வானவுமை யமுதவற
லாடியருளே, அருளுமொரு ளுரியநக ரளகைநிக ரென
விரிய வமுதவற லாடியருளே. (9)

சனகனொனு மனகனவை மறையவரை முறையின்முனி தன
யனவ னனிமுனியவே, தவநிகமு சிவைமகிழு தருணி
யென வவனருண தரணிபனு மடிதொழுகவே ;

தனயவின வுவசிலவை தடையில்விடை தருதிவிதி தரவு
மெதிர் மதுரமொழியாள், தனியதனை யறிதியெனி னவித
மெவ னவிதமது தனதுமிலை யெனமுணுகுநீ ;

அனையவது வறியினரு வமுதபத முறனுமிதை யறிகவிறை
தனினேதியே அறிவினுரு கரையவொளி ரமையுமெமை
யதுவழியி லருளவொரு பகலுமுறவே ;

யநகநிர வயவபர வறிவுநவை யகமறிய வமுதவற லாடி
யருளே, யணிபணிசெப் வணிகர்நிறை யருள்பொருள்வை
யழகியெழு மமுதவற லாடியருளே. (10)

ஒன்பதாவது நீராடற்பருவம் முற்றிற்று.

---

பத்தாவது

## ஊசற்பருவம்.

வெங்கனவை மெய்யெனவு மெய்யிதனை மெய்யெனவும் வீட
தென வோடிவாடி, வெந்துமிக நொந்துதிரி திருசியா
காரனை விரைந்தருள லெந்தநாளோ;
கங்குல்பக லற்றவிட மெங்குளது சங்கற்ப கற்பனைக ளற்ற
ஞான்றே, களிமிகுத றுயிலிலனு தினமனுப வமதுறவுங்
காணுதபோணுணியே;
பங்குவென வந்தனென வதிரனென வெதிர்நிகழ்வன் பார்
வதீ தயைசெய்துநீ, பாவியே னககரண வூசன்மிசை
யேறியே பரமவாநந்த மிகவே;
புங்கானு புங்கமாய்ப் பொங்கிவர வெங்குநிறை பொன்னூச
லாடியருளே, பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த
பொன்னரசி பொன்னூச லாடியருளே; (1)

சேத்தியந் தன்னைவிட் டாற்சேத னந்திகழுஞ் சேத்தியஞ்
சிவையையன்றிச் சிறிதுமில்லை வெறிதுலவு சித்தமே சேத்தி
யஞ் சித்தமுஞ் சிவைமயமதே;
சேத்தியஞ் சித்தமல துறையுமெனி லதுதனைச் சித்தமின்
றிக்கண்டதார், சிவனுமவ ளொருஞான மதுபிரிவு கதுவுறு
சேர்வதெங் கேபிரிவகை,
ஆத்தியந் திகமாக வடிவத்தை யதுவிடின் னலாப மாமலீகம்,
அலைமனமு மேயசத் தாதலாற் கனவென்ன வன்னைநீ
யன்றி யுளதோ;

போத்தியம் போதமென வாய்நின்ற பொன்னரசி பொன்
னூச லாடியருளே, பொருள்வைத்த சேரியினி லருள்
வைத்த புண்யவதி பொன்னூச லாடியருளே. (2)

விதியினெடு விண்டுவும் விமலனும் விபுதரும் வித்தையே நீ
கதியென, வெகுதவங் கோலவுந் திரிபுரா தேவியும் வெளி
யாகி வேண்ட லென்னே ;
கதியெதென் னருடியென் றிடவுமக் காட்டையைக் காட்
டியே கைவரற்காய்க், கடலின்மணி தீபநீ பவனசிந் தாம
ணிக் கவினுமண் டபமதனிலே ;
விதிமுதன் மயமஞ்ச மீதிலே திரிபுரா மிளிருசுந் தரியின்
சிந்தை மேலதா மேலுமா விரிதரின் மகிமையை வேதமே
யோது மெனருய் ;
போதமே வடிவதா யோதமே யென்மனப் பொன்னூச லாடி
யருளே, பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த பொற்
புருவி பொன்னூச லாடியருளே. (3)

வித்தையுள் ளத்துவித வித்தையே மிக்கதா மேலான பல
முதவுமாம், மின்னென்னை யுன்னிடா ததுமன்ன லெங்
ஙனே மிதியெனது வடிவமன்றோ ;
இத்தையக மென்றிடல் வென்றிடின் னிஃதுறுவ திஃதுறின்
யாதுமறிவாம், இச்சை முதல் வாதனைக டுன்புறுத்
தாவந்த விடமெலா மிந்தனந்தீ ;
அத்தியந் தமுமஞ்சல் துஞ்சிடும் ஞாதாதி யாடம்ப ரங்கண்
மங்கும், ஆசையற் றிடுநற்ற வர்க்குற்றி டும்விரைவி லறுமி
னென் றருள்செய்தனே,
பொத்தையுள் ளுள்ளமள் ளாடிடும் பொள்ளாது பொன்னூச
லாடியருளே, பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த
பொங்கமது பொன்னூச லாடியருளே ; (4)

அன்னைநின் மகிமையினை யாரெடுத்துரைதருவ ரற்புதம்
அற்புதமதே, யறிவார்க ளறிவார்க ளறியார்
கள் அரனுதியோ ரதிட்டம் ;
முன்னைருக் மாங்கதனு மேமாங்க தனும்வனம் முன்னியே
பிரமராக்க முதலவன்கைப்பட் டவன்விட்ட முதல்வியின்
மூதறிவின் மூதுரைகளுக் ;
குன்னையேநுதலவும் மன்னியெழு புண்ணியத் தூற்றத்தினு
லுருவுபோ, யுவரையும்விட்டுள்ள கதியதனை யண்மியே
யுவகையுற் றனனென்பதாற் ;
பொன்னையே மண்ணையே பெண்ணையே விடமனப் பொன்
னூச லாடியருளே, பொருள்வைத்த சேரியினி லருள்
வைத்த செல்விநீ பொன்னூச லாடியருளே. (5)

ஆகாச நீலமது மாடியின் னீழலும் மறியார்க ளறிவார்கள்
போல், அம்மையின் பாலகில மயலாகி யுயலாகி யாமிரு
வர் பாலுமென்ப,
ஆகன்ம விலயமும் விவகார மகலாதிங் காயினு மம்மைசரணை
யகர்நிசமு மறவாம லுறைதலா லுகர்வினையை யனுப
விக் கினும்விக்கலார் ;
ஏகமும் போகமும் மிவர்மனத் தள்ளளவு மிப்பிறப்பே முடி
வதா மிதிலைய மிலையென்ன வேமாங்கதன்கூறு மெழி
லான பெருமையுடையாய் ;
போகாலயத்தினிற் காரணமெனு முஞ்சலிற் பொன்னூச லாடி
யருளே, பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த கண்
ணம்மை பொன்னூச லாடியருளே. (6)

எம்பிரான் முதலாக வீர்கடைய தாகவே வெம்மம்மை யேதங்கினும், இலகுவாய் பொதுவாக வார்ப்புனு யெத னேடு மின்பமே வடிவமாவாய் ;
இன்பமா மிவளில்லை யாயிடின் வாழ்வதிங் கெவ்வுயிர்க ளிவ ளின்பினின், இலேசமே கொண்டுமிக வாநந்தம் வந்ததென விந்திரா தியரும் வாழ்வார் ;
அம்பிகைய வித்தையாம் வித்தையாம் பந்தமும் மப்பந்த நீங்குமுறையும் அளவற்ற போகமுங் களவற்ற யோகமும் ஆகுவா யையமில்லை ;
பொன்பருங் கால்பொறிக் கான்மனம தேயூசல் பொன்னூச லாடியருளே. பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த தேவியுமை பொன்னூச லாடியருளே. (7)

அன்னையே யறிவிக்கு மாநந்த வல்லியினி லறிஞனுமை யாவ னென்றே, அரியபர வாகாச பாரமே சுரிசத்தி யாநந்த மயமாகுமே ;
பின்னையே விந்தவா காசமா நந்தமாய்ப் பேணுவிடில் வாழவோ, பிருகுமா வல்லியினு மின்பினின் றேயிவைக ளொன்பதாற் பேசுமுன்னையே ;
தன்னையே யுரைபிருக தாரணிய மதனினுந் தாய்வினவ முனி யுரைப்பான், ருயிடத் தேயிவைக ளோதம்பு ரோதமரந் தன்மையா லுனையடைந்தேன் ;
பொன்னையே யன்றியொரு பூடணம திலதுபோற் பொன் னூச லாடியருளே, பொருள்வைத்த சேரியினி லருள் வைத்த வன்னமே பொன்னூச லாடியருளே. (8)

சத்ததே சித்தாயுஞ் சித்ததே சத்தாயுஞ் சச்சிதா நந்தமாயுஞ் சார்கின்ற நினையந்தர் யாமிப்பி ராமணமுஞ் சாந்தோக்கி யோபநிடமும் ;

அத்தேவ சத்தியினை யேதுவென் றோதஞ்சு வேதாசு வதர மறையும், அரியசிவ சிவையாகி கவுரிமங் கலையாகி யவ்வி ண்டு பரமபதமாய்ச்.

சித்தேயென் னுருவமா யஞரெலாந்தீரவுந் தேகாதி மயலேக வுந் திவ்யமா வருடரச் செப்பிவைப் பாய்வீர சேகரக் கய முகற்கே ;

புத்தமுத போகமே பூரணா னந்தமே பொன்னூச லாடி யருளே, பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த தெய்வமே பொன்னூச லாடியருளே. (9)

தென்னசை யேசகுரு திருமாலு நான்முகனுஞ் சீர்வசிட் டர் சத்தியே, திகழுறுப ராசரவி யாசர்சுகர் கௌடபதர் சேடகோ விந்தயோகி ;

தன்னேச சங்கரர் சலசபதர் வார்த்திகாத் தாமலகர் தோட காசான் தார்வித்தி யாரண்யர் சுப்ரமணி நயினவழ கப்பவீ ரேசபத்ரர்.

முன்னசின் முத்தைய ருகந்தைய ராண்டவர் முதிர்துறவு கருணையிறைவர், மூடனேன்ற னையாண்ட வீரசே கர ஞான முனிவர்பத முனிவர் வாழப் ;

புன்னூச லாடுமன மென்னூசல் கொண்டுநீ பொன்னூச லாடியருளே, பொருள்வைத்த சேரியினி லருள்வைத்த சுந்தரீ பொன்னூச லாடியருளே. (10)

பத்தாவது ஊசற்பருவம் முற்றிற்று.

ஸ்ரீ சௌந்தரியநாயகி பிள்ளைத்தமிழ் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ சௌந்தரியநாயகி துணை.

சிவமயம்.

ஓம் மகாகணபதயே நமঃ

# ஸ்ரீ குருமுறையும் திருவாலயமும்.

அன்புமிகுந்த அரிய பெரியீர்!

சிறிது நுதல வேட்கைமிக்காம் ஆகலின் ஒரு சிறிது போழ்து செவி சாய்க்குமாறு அன்பானே வேண்டுகின்றும்:—ஸ்ரீ சௌந்தரியநாயகி பிள்ளைத்தமிழில் உலகீன்ற அன்னையின் உவகைதருஞ் சரிதாமிருதங்கள் ததும்புகின்றனவென்பதுகண்டாமன்றே! நிற்ப, அதனீற்றுத் திருப்பாசுரத்தில் ஸ்ரீ சுவாமிகள் தமது குருபரம்பரையைக் குறிப்பித்தருளியுள்ளார்கள். ஆண்டு ஆசின்முத்தையர் என்னும் ஆசிரியர் வாரம் ஒருமுறை விழிப்பதாய அதிதிட அசம்பிரஞ்ஞாத சமாதியில் அமர்ந்தருளியிருப்பர், வெளிமுகம்மாயவஞ்ஞான்று உகந்தையர் என்னுந் தமது மாணுக்கர்க்கு ஞானவாசிட்ட முதலியவற்றை அநுக்கிரகித்தருளுவர். அவ்வாறு அநுக்கிரகம்பெற்றுத் துறவுபூணும் உறவுகாணவே தமதாசிரியர் திருவாணையானே, கைம்மாறுதருதலேய்ப்ப வில்லறதருமத்தை யியைந்தனர். இயைந்து திருவள்ளுவ நாயனர் என்னுந் தெய்வப்புலவர் கடுப்ப அத்தொழிலையும் அருந்ததியன்ன திருந்திய தருமபத்தினியையும் கொண்டு இல்லறம் நடத்துங்கால் மிடியென்பது கடிதுபடினும் தம்பால்வரும் சிவநேசச்செல்வர்க்கு, உண்ணத்தொடங்கும் உணவையும், அயலார் வளவிற்சென்றேனும் கொணர்ந்துவரும் உணவை

யும் உதவிப்பெரிதும் அவ்வம்மையார் தொடங்கிய தருமம் வழாதவப்பர். எனின் இவ்வம்மையார்க்கீடுண்டாங்கொல்! இலது! இலது!! இலது!!! எனலாம். ஸ்ரீ உகந்த ஞான தேசிகரோ ஸ்ரீ வசிஷ்ட பகவானுக்கொப்பான நுண்ணூ லுணர்வும் தண்ணிய திண்ணிய சுவாநுபவமும் அண்மி யுண்மையின் செஞ்சரண் புகுந்த விவேகாதி யுகந்தார்க்கருள் வாராயிருந் தருளினர்.

அக்கால் நமது ஸ்ரீ கோவிலூர் ஆண்டவர் தங்கடை நோக்கி யங்கடைந்திடினும், வானும் வையமும் போற்ற யாவரு மூய்வானருள வந்தவராதலின் ஆசிரியரை யடை யுங் குறிப்பே மேற்கொண்டிருந்தனர், இருந்த ஞான்று தங் கடை நண்பர் ஒருவர் ஞானதேசிகர் தரிசனப் பொருட்டுச் செல்லுங்காற் றாமுங் கூடவே சென்று சந்நிதியில் அழன் மெழுகும் கல்லென்னுமாறு உருகித் தண்டம்போலும் வணங் கிச் சிரங்கரங்கூப்பிநிற்ப, உகந்தையர் கண்டுள மகிழ்ந்து இக் குமரன் யாவனென அன்பரை வினவ அவரும் எமது முத லாளி சுதனெனச் சுதைக் கொப்பான சுதனை நோக்கி, அன்ப ஈண்டுவந்து போவதோடும் திரிமூர்த்திகளும் பயிலும் உபநிடத நூற்களையும் ஓதியுணர்தி யென்றருள, அத்திருவாய் மொழியை அத்திங்கள் முதற் கடைப்பிடித்து ஆத்தம், அங் கம், தானம், சற்பாவம் என்னும் நான்கு பணிவிடைகளையும் யாவரும் வியப்ப ஆற்றி மெய்யடியராயிருந்து "கசீசமசதீ யஞ்ஞவேத சங்கரகைதசி, லகீசவசு தேபிரஹ்ம வாசிஷ்ட மிதிசோடசம்" என இஞ்ஞான்று ஸ்ரீமதாண்டவர் சந்நிதியி லனுக்கிரகித்தருளும் வேதாந்த சாஸ்திரம் பதினாறனுட்சில நிற்ப மற்றவற்றை முறையேயருளப்பெற்று, அடியார்க்கன்ன முதவுவதே தந்நாயகன்றிருத் தொண்டுக்கிரண்டாவதாகக்

கொண்ட அவ்வம்மையார் மிடியகல வேண்டும் வேண்டுங் காலத்தே வேண்டிய வேண்டிய வுதவி மகிழ்வித்திருந்தனர். அம்பிகையின் பரிபூரண கிருபைவாய்ந்த நமதாண்டவரும் ஆசிரியர் சந்நிதியில் அநேகந்தெய்வீக வைபவத்துடன் இருந்துவரும் நாளில், ஞானாசிரியர் திருவாணைப்படி தாமவதரித்த திருக்காரைமாநகர்க்கேகி அடிக்கடிவந்து பொருள்வைத்த சேரியிலெழுந்தருளி யிருக்கும் தமது ஞானாசிரியராகிய பரம்பொருளைத்தரிசித்துப் போவாராயினர். அவ்வுகந்தவேவரும், உலகமெலாம் ஈன்றருளிய ஒருத்தி தனப்பாலுண்டும் வளரும் நங்கஜமுகப்பெருந்தகைக்குமாறுதா பூண்டொழுகு அன்பினராதலின், அம்மோதக அத்தர் சித்திரைவெய்யிலிற் புழுங்கி வெம்பியாசிரியர்பா னண்ணி அன்ப! திருமேனி குளிர்விக்குஞ் சந்தனவபிடேகம் எமக்குச்செய்தியென்றருள, அானரியயனாதியர் போற்றும் அரும்பெருந்தகாய்! அத்துணைப்பொருளிருப்பின் அநேக நின்னடியவர்க் கமுதூட்டிக் களிப்பல், அபிடேக அவாவேல் அரும்பொன்றா விரும்புகின்றனன் என, தங்கமலையைத் தங்கரங்கொண்டதாணுவின் மைந்தனும் அன்னணமே யொரு அரும் பொன்காசுதர அதை யையன் றிருப்பிரசாதமாக வைத்துக்கொண்டு அபிடேக முதலியவற்றைச் சிறப்பா யின்புடனும் அன்புடனும் ஆற்றினர். இவ்வாறுய அநேகந் திருவிளையாடல்களை யாற்றிக் கொண்டு தம்மை யடைந்த திருவண்ணாமலை ஸ்ரீ ஈசானிய தேசிகர் முதலியோர்க்கனுக்கிரகித்தருளியும், சிதம்பரம் ஆயிகுள மேவிவளர் ஞானகுருநாதராகிய ஸ்ரீ மௌன சுவாமிகள், திருவாரூர் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் முதலிய மகேசுரர்க் கொப்பாய பெருந்தவர்கட்கு மகேசுர பூசை முதலியவற்றை நடாத்தியருளியும் இலங்கிச் சின்னாட் சென்றபின் விதேக முக்தியை யடைந்தருளினர்.

அதன்பின் நமதாண்டவர் மோக்ஷதீபத்திற்காக ஆங்கெழுந்தருளிய ஸ்ரீ ஈசான்ய தேசிகர் முதலிய பெருந்தவத்தினரது சந்நிதியில், திருச்சிற்றம்பலத்தினின்றும் எழுந்தருளிவந்திருந்த ஸ்ரீ வீரபத்திர சுவாமிகளைத் தமது ஆசிரியர் பீடம் விளங்கத்தாபித்துத் தாமேயிருந்து கயிங்கரியம்புரிந்து மடாலயமுங் கண்டுதந்தனர். ஷை சுவாமிகள் செய்த குருபக்தியை வியக்க ஆதிசேடனுங் கூடாதெனின் யாமெங்ஙன் கூறல். நமதாண்டவரே கோபத்தை வெட்டியட்டதொரு வீரனே யென்றும் வேதவாகமபுராணரூபமெனும் வீரபத்திரசுவாமியே யென்றுந் தோத்திரஞ் செய்தருளி யிருத்தலின் அப்பெருந்தகையாரின் பரம வயிராகத்தையும் அசேடசாத்திர பாண்டித்தியத்தையும் பரமசாந்தியையே பயனாகவுடைய சுவானுபூதிச் செல்வத்தையும் பரமேசுரரது திருவருள் உற்றிருந்த மேன்மையையும் யாவரே கூறவேலும்? அவர்க்குக் கிடைத்த அத்தகைய பெருமையாவையும், அவர் தமது குருவாகிய கரங்காவிலா ஸ்ரீ வெள்ளிக்கிழமை மடத்து சுவாமிகட்கியற்றிய, எப்போலியர் எண்ணுவதற்குந் திண்ணமாய் நண்ணுத பணிவிடையின் பயனேயென்ப.

அஞ்ஞான்று ஸ்ரீ ஞானதேசிகரது பேரக்காரராகிய ஸ்ரீ சிங்காரவேல் சுவாமிகள் சின்ன சுவாமிகளாக உதவியாசிரியராய் அங்கு வீற்றிருந்தருளினர்; இவரே பிற்போது கருணாநிதி யென்னும் ஸ்ரீ சிதம்பர ஞானதேசிகர் தம் சீடராகி விளங்கியவர், முற்போது பக்திமாத்திர பரராகி வேதாந்தத்தில் வாஞ்சையற் றிருந்து ஸ்ரீ சௌந்தரியநாயகி பொன்னருளால் ஸ்ரீ கோவிலூரடைந்து ஸ்ரீ ஆண்டவர் தஞ்சிறந்தசீடராகிய கருணாநிதியின் சீடராய் வேதாந்தசாஸ்

திர சிரவணஞ்செய்து நிஷ்டாபராயினர். இவர் காலத்தில், ஸ்ரீலக்ஷ்மிதேவியின் தவத்திற்கிரங்கியருளி ஸ்ரீசொர்ணபுரீசரும் ஸ்ரீ செளந்தரிய நாயகியம்மையாரும் எழுந்தருளியிருக்கும் பொருள்வைத்தசேரிச் சிவாலயம் மடத்தின் மேற்பார்வையிலிருந்தமையின் அபிஷேக பூசையருச்சனையாதிகள் அதிவிமரிசையையுற்றிலங்கின. இவர் தமக்குப் பிள்ளைத்தமிழ் கொண்டருளிய அம்மையின் சாந்நித்தியம் கிடைத்திருந்தமையின் திருவருளும் நிகழப்பெற்றது. ஒருசமயம் அம்மையார் சிறுமறையவர் குழவியாய்க்கண்ணுற்று அன்ப! நீ மாத்திரம் அழகிய வஸ்திராதிகள் அணிந்து கொள்கின்றனையே எமக்கொருஅணியும் அணியக்காணேமே யென்றருள, இன்றேமுயல்கின்றேனென்று புயன்று செய்து அநேகம் ஆபரணங்களை யம்மையகங்குளிர அணிவித்தனர். மற்றோர்சமயம், கள்வர் அம்மையாரது நகைகளையும் பட்டாடைகளையும் கொண்டேக, ஸ்ரீ வீரபத்திர சுவாமிகள் முன்னிலையில் ஒரு மறையவர் சிறுமியாய் அம்மையார் வந்துற்று, ஹே அருந்தவ மிகுந்த சுவாமிந்! இன்று சுக்கிரவாரமாயிற்றே எமது ஆபரணங்களெங்கே? பட்டாடைகளெங்கே? இன்றணிய வேண்டாமோ ஏன் கவனிக்கவில்லை! சின்னச்சுவாமியிடத்தியம்பிக் கவனிக்கச்செய்க வென்றருளி மறைந்தனர். உடனே பெரிய சுவாமிகளும் சின்னச்சுவாமிகளையழைத்து அம்மையார் உத்தரவான வற்றைத் தெரிவித்து மடத்துள் ளிருக்கும் பட்டாடை யாபரண முதலியவற்றை யெடுக்குமாறுஞ்ஞாபிக்க, உடனே சுவாமிகளும், மடத்துட்டேட ஒன்றுமே அகப்படாமையின் எங்கும் எத்துணைமுயன்று தேடியும் ஒன்றுங் காணாமையின் மடத்தின் அபிமானியும் அன்பருமாகிய மெய்யப்ப செட்டியாரிடம் நவின்று வருந்துற, அத்தனவைசிய சிகாமணியும் உத்தி

யோகஸ்தர் சகாயங்கொண்டு, வெளிப்பாளயத்தில் ஏகாம்பர முதலியார் இவற்றைக்கொண்டு சென்று வைத்திருப்பதைக் கண்டு மீண்டுங்கொண்டுவர, அதுவரை யாகாராதிகள் யாதொன்று மின்றிக் கவலையடைந்து தேவியாரைத் தியானித்துக்கொண்டிருந்த ஸ்ரீ வீரபத்திர சுவாமிகள் சின்ன சுவாமிகள் அடியார்கள் யாவரும், பரதேவதையின் கருணையை வியந்து கொண்டாடிப் பரமாநந்தசமுத்திரத்தில் மூழ்கி மெய்யப்ப செட்டியாரை யாசீர்வதித்துப் பூசையாதி முடித்து விசிராந்தியடைந்தனர். ஸ்ரீ வீரபத்திர சுவாமிகளோ மிகுந்த காட சுழுத்த நிஷ்டாபராயிருந்தமையின் தம் பூசையாதி காரியங்களும் சிரவணாதிகளும் பிறர் முயன்ற பிரேரணை யானே முடித்து வருவாராயினர். ஸ்ரீ சிங்கார வேல்சுவாமிகள் ஜகதாம்பிகையின் பாதார விந்தத்தில் அழுத்தமிக்கதிபத்தியானே புராண சிரவணசித்தாந்த சாஸ்திர படனஞ்செய்து வருவாராயினர், அக்காற்றான் ஸ்ரீ சட்டையப்ப ஞானதேசிகரும், காரைக்குடி சுவாமிகளென்னும் ஸ்ரீ கோவிலூர் இராமசுவாமி ஞானதேசிகரும், ஸ்ரீ சேக்கிழார் பெருமான் "உலகெலா முணர்ந்தோதற்கரியவன்" என்றடியார்க்கடியராம் பொன்னம்பலவாணர் அடியெடுத்துக் கொடுத்தருளப் பாடி முடித்தருளிய திருத்தொண்டர் புராணபடனஞ் செய்துவந்து அதன் சிறந்த சமாப்தி மகோற்சவ சமயத்தில் குருகயிங்கரியமாக ஸ்ரீ சிங்காரவேல் சுவாமிகளின் திருவாணை சிரங்கொண்டு ஸ்ரீ சௌந்தரியநாயகியார் திருவாலயப்பிராகாரத் தளவரிசையியற்றினர்கள். இத்திருப்பணியையும் இவர்கள் அன்பினையும் திருவுளங்கொண்ட திருத்தேவியார் இம்மூவரையுமே கருணாநிதியின் சந்நிதிக்குச்சுருதிசிகர சிரவணஞ் செய்யுமாறு செலுத்தியருளினர். என்னே! அம்பிகையின் கருணை என்னே! பக்தியின்

பெருமை என்னே ! இதுபற்றியன்றோ தருமமேக சமாதிச் செல்வராய் வீற்றிருந்த நங் தாயுமானாரும் மூர்த்திதலந் தீர்த்தம் முறையாய்த்தொடங்கினர்க்கு வார்த்தை சொல்லச் சற்குரு வாய்க்கும் என்றார். ஏன்? மாவாக்கியப் பொருள் கேட்பது பெரும்பாக்கியப் பாலதன்றோ இன்றேல், பாக்கியத்தாலே பழமறை மொழிந்திட்ட வாக்கியங்கேட்டோமென்றுந் தீபற வென்றியம்பாரன்றோ பெரியார். இம் மூவருள் ஸ்ரீ சட்டையப்ப ஞானதேசிகர் ஸ்ரீ சிங்காரவேல்சுவாமிகட்குப்பின்னர், ஆங்குறைந்தநேகம் அடியார்கட்குபதேசித்தும் குருமூர்த்திகட்காலபம் கட்டியும் இப்போதிருக்கும் மடாலபம் கட்டியும் பூஸ்திதிசேர்த்தும் வைத்ததுடன், தமதாசிரியர்மீது வேதாந்த சாஸ்திரம் பதினாறன்பொருளையுமமைத்து மிகவழகியதோர் நெஞ்சுவிடுதூது என்னும் பிரபந்தத்தை யியற்றியருளினர்.

இவ்வண்ணம் அப்போது மடாலபமும் சிறப்புற்றுச் சிவாலயமும் சிறப்புற்று ஊரும் பேரோங்கிப் பொருண் மிகுந்து பிரஜைகளும் பெரியராய் விளங்கியது புதிதன்றே! ஆலயந்தொழுவது சாலவும் நன்றென்றார் ஆன்றோர்: அதனாலேயாவுஞ் சிறப்புற்றோங்குதல் அடிமரத்தறலீதலே போலும் என்பர், அன்பர்காணினே மின்! கண்டீரே நமதாண்டவர் பெருமையை, திருக்காரைமா நகரில் நமதாண்டவர் திருவவதாரஞ்செய்திலாராயின் சிக்கலிற்றோனுதல் அதன் பக்கலிற்றோனுதல் எறும்பூர் முதலிய எப்பக்கலிற்றோனுதல், சேதுமுதலிய க்ஷேத்திரங்களிற்றோனுதல், தனவைசிப சிகாமணிகளின் மாளிகைகளிற்றோனுதல், அடியார் குழாங்களிற்றோனுதல், பிறவிடங்களிற்றோனுதல் நிகழாநின்ற விசேடம் நிகழுமாறெங்ஙன் ? கண்டீரன்றே ஸ்ரீமதாண்டவர் சந்தானம்

கல்வித் துறைகளினும் செல்வத் துறைகளினும், அரசத் துறைகளினும் அடைந்துள்ள பெருமையை, என்னபாக்கியஞ்செய்தோமோ எது புண்ணியந்தான் செய்தோமோ அறிந்திலேம், ஸ்ரீமதி திருநெல்லை சீரடி பெற்ற திவ்யஅமுத ஆசிரியரின்றொண்டர் யாமெனப்பேசுதற்கு நம்மனமெங்கே நான்மறைமுடிபெங்கே, நால்வர் திருவாய்மொழியெங்கே, க்ஷேத்திரந்தேர்ந்ததார், பாடசாலைபார்த்ததார், கலாசாலை கண்டதார், தீர்த்தந்தோய்ந்ததார், திருநதித்துறை கண்டதார், எல்லாம் எமையாட்கொண்ட எம்பெருமான்றிருவருளேயென்பேம், என்பதென்னவம்! நமது ஸ்ரீ சௌந்தரியநாயகி பிள்ளைத்தமிழ் ஆசிரியர், 65வது திருவிளையாடலாகிய ஸ்ரீ அசுவத்தேசப்படலத்துள் நுதலியருளியுள்ளதைக் காட்டுதுங்காண்மினோகாண்மின் !:—

“பிரமவாநந்தப்பெருங்கடன் முழுகியேபிறிவறச்சுகித்தாடி,
யொருமைமேயநன் மகத்துவன்விகற்பமிலொள்ளிய நிலைநிற்போன்,
கருமமே கிடக்கண்டவர் பிணியறக்கதிர்விடு கவின்வாய்ந்தோன்,
பெருமை பேசிடச் சேடனும் பின்னுறிற்பேசுறுந்தகைத்தாமோ.

சிக்கிற்றேசிகன் சேவடிசேவை செய்திருநாண்,
மக்கினச்சுரம் வந்துறமாலயன்றேடுந்,
தக்கவன்னையேகன்னியாய் முத்தினந்தணிப்பான்,
புக்கிருந்தனளெனினவன் பெருமையார் புகல்வார்.

காரைமாநகர்க்கேகியே கால்கள்நொந்திடவே,
வீரமாதவன் வெண்டுகளெனக்கருள் விமலே,
சேரையா வினிக் கோவிலூரெனச்செப்பிற்றேவன்,
பேரையேதினம் வழுத்தலல்லாற் பிறிதுளதோ.

அன்னைநெல்லையாளநுதின மகர்சிசமருகில்,
முன்னவன்னுடனிருந்தருண்மொழி மொழிந்தனளேல்,
பின்னவன் பெரும்பெருமையைப்பேசநாவொன்றே,
சொன்னவின்றிடுந்தகையது தொண்டரேசொன்மின்.

பிரமவித்தையின் பரம்பரை பெரிதினினிலவ,
அருமைவைத்தநன் மடமொன்றை யாற்றெனவனையே,
கருமமுற்றுறக் கதலிமுற்பொருள்களையருளின்,
திரமெதத்துணையாஞ் சொலத்தேசிகன்புகழே.

அன்பினித்தியமங்கலையையன் முன்றேன்றி,
யன்பவோருண்டைக் கிருவருமண்மினமெனவே,
என்புருகியவன் பொடுமெழுந்தருள்புரிந்தால்,
முன்பன சீர்த்தியைச்சேடனுமொழியவோ மொழியீர்.

ஐயனுர் முதற்றேவருந் தங்குறையகற்ற,
மெய்யனுரிடம் விண்ணப்ப மிழற்றுவரெனின்யாம்,
துய்யனுர்பதம்தொழுவதைவிடுத்தொரு கணமும்,
பொய்யனுருடன் வாழ்வதும் புகழ்கொலோபுகலீர்.

எவனுலகினிலெழுதலாலெங்கணு மறையின்,
உவமனின் றிய முடிபொருளோசையே மிகுத்த,
பவமகற்றிடுஞ்சீடர்தம் பரம்பரைபரந்த
தவன்பெருமையை யறையுமாறெங்ஙனேயறையீர்.

சகுரவன்முன் வந்தருண் முறையெலாஞ்சகத்தின்,
மிகக்குயிற்றின மேலவனுதித்திலனயின்,

புகல்வதெங்ஙன் யாம் மறைமுடிப் பொருளினையிருணின்,
றகல்வதெங்ஙனமன்பரேயறைமினேவறைமின்.
சாத்திரக்கடல் விரிந்ததுஞ்சதுர்மறை விரிவுங்,
கோத்திரத்திரள் விரிந்ததுங்கோவில்கள் விரிவும்,
நேத்திரத்திருநாதனே நேரின்முத்திசக்
காத்திரந்தரியானெனிற் காண்பவரெவரே.
தென்முகமாகிவை தந் தேவனேதென்னாடுற்ற,
நன்மை செய்யறத்தினனே ஞானதேசிகனாய் வந்தே,
புன்மைமிக்கிருந்தவெம்மைப் புகழ்பெறப்புரிந்திட்டானல்,
தன்மையையறிந்திலாருந்தரணியின்மநுடர் தாமோ."

காலவேற்றுமையாலெல்லாங் கலங்குமென்றபடி, மங்களம் பொங்கித்ததும்ப ஸ்ரீ சிங்காரசுவாமிகள் நடாத்திவந்த பெருமையைக்கண்டார் கண்பட்டோ, ஊரார் துரதிட்டமுட்டோ, மற்றெவ்வேறுபட்டோ அறியேம், சிவாலயத்தை மடாலயத்தினின்றும் பிரிப்பான்றலைப்பட்டார்சில்லோர். பிரிவுபடவே ஊரும் விருத்தியற்றுச் சிவாலயத்தினடந்துவந்த சிறப்புங் குன்றி மடாலயமும் நிலைகுலைந்து கடாலயமாயும், சிரவணாதியற்றும், பூசை முதலியவையும் நடைபெறுதலின்றித் தட்டுக்கெட்டு யாவுந்தடுமாறிப் போயது. பின் அம்பிகை நோக்கோ அருட்பெருந்தாக்கோ அடியவர்போக்கோ, அறியேம் யாம் சிற்றறிவினம், கருணாநிதியின் கொடைபோன்ற சிடப்பெருந்தவருள் மேன்மை மிக்குப் பெரிய சுவாமிகள் என்று சகங்கொண்டாடும் ஸ்ரீ பகவற்கீதை, கைவல்ய நவநீத வுரையாசிரியர் தம் திருவாணையானே; நங்குறைதீரப் பழைய

வயலைப் புதுவயலாக்கிவந்து சமிவனத்துறைந்து அந்நல மிருந்த க்ஷேத்திரத்தைநம் பிள்ளைத்தமி ழாசிரியராகிய ஸ்ரீ திருக்களராண்டவர் பாதசேகர அடிகள், "சீரார்கழனித் திருநகரைத்தேவர் புகழ், பாரார் கயிலையெனப்பண்ணினன்— நீராருஞ்,செஞ்சடையை நீத்த சிவஞான வீரேசன், மஞ்சுபுகழ் கைமமா மணி" யெனப்புகழ்ந்தருளியபடி யாற்றியருளி, அவ் வாறே தருவனத்திருக்களரையும் செய்தருளி, ஸ்ரீ மன்மணி வாசகப்பெருந்தகை நிகர்ப்பத்திருத்தேரி லெழுந்தருளி யிருந்த ஸ்ரீ அமுதவல்லியம்பா சமேத ஸ்ரீ பாரிஜாத வனேசு ரரைத் தரிசித்து மகாதேவ நாம சிரவணத்துடனடங்கிச் சோதிர்லிங்க மூர்த்தமாய் இப்போதுந் தருவனத்துறைந்தரு ளும் எம்பெருமானாகிய ஸ்ரீ வீரசேகர ஞானதேசிகப் பெருந் தகையின் பெருமுயற்சியானே ஒருவாறு மடாலயம் சீர்திருந் திநல்நிலமைக்கு வரத்தொடங்கியது. அக்கால் யாம் திருக்கள ராண்டவர் திருப்பாதஞ்சென்றடைந்து சிரவணித்து வந் தேம், எத்திருவுளம்பற்றியோ எம்மைப் பொருள்வைத்த சேரியதிட்டானத்திற் போய்த் தங்கும்படி யருளக் குரு வாணை சிரங்கொண்டு வந்திருந்த காலையிற் சிறிது சரீரமும் சுகமுற்றது கண்டு குருப்பிரான் றிருவருளை வியந்து வசித் தேம், அக்கால் எமக்குதவியாகிய துணைவரென்னப்போற்றும் ஸ்ரீ மாரிமுத்துச்சுவாமிகளும் உடனுறைக்கு வீற்றிருந்த பெரு மையால் சாஸ்திர விசாரத்திற்கும் குன்றுதலொன்றுதிருந் தது. இச்சுவாமிகள் இதுகாறும் எமக்கீருடம்பாகி ஒருயிரா யிருந்தபெற்றி யென்னவிருந்துவேண்டிய காரியாகாரிய உத விகளும், சமயோசித புத்திமதிகளும், பிராசீனமடாலயவிடய சிவாலயவிடயச் சரிதைகளும் தந்து உபகரித்தமையை எந்நா ளும் மறக்கத்தக்கதன்றாகி மேலும் மேலும் ஆயுளும் பலமும் அம்பிகை தந்தருளப் பிரார்த்திப்பேம், இப்பழைமையான

சரிதைகளைக் கேட்குந்தோறும், ஆ! ஆ!! ஸ்ரீமது கோவி லூர் ஆண்டவர் சந்நிதிக்குப் பரம்பரையுபாசனை மூர்த்த மாகிப் பிரஹ்ம வித்யாபீடமாகி யொளிருந் திருநெல்லைநாயகி யார் போன்றன்றோ இம்மகா மகிமைவாய்ந்த ஸ்ரீ சௌந்தரிய நாயகியாரு மிலங்கியிருந்தருளியுள்ளார், இவ்வம்மையார் திரு வருளுக்கிற்கு யாம் ஈடுபடுவதென்றோ என்னும் முளை யானது எமதிதயத்தே கிளம்பியபோதினும் ஆசிரியர் ஆணைக்குட்பட்டவனாதலின் அவ்வங்குரம் அக்கால் ஓங்கற் கிடனின்றுயது. காலம் நீடவே எமதாசிரியர் திருக்களரில் மகா வைபவத்துடன் ஸ்ரீமணிவாசகப் பெருந்தகை நிகர்ப்ப விதேக முத்தியை யடைந்தனர், பின் சின்னாட் செல்லவும் யாமும் கிரமசந்யாசமுற்று, தவம்வளர்க்கும் அவாவுடன் அஞ்ஞான்று அடியவர் பெருந்திருக்கூட்டததுடன் இலங்கிக் கொண்டிருந்த நமது பிள்ளைத்தமிழாசிரியராகிய ஸ்ரீ மகா மண்டலேசுரரது சந்நிதியே யேற்பதாமென்றெண்ணி யங் குற்றேம், ஆங்கு, அவர்களது பெருநண்பரும் எம துயிர்த் துணைவருமாகய ஸ்ரீ மாரிமுத்துச் சுவாமிகளும் ஸ்ரீ மகா மண்டலேசுரரும் இன்புடனெம்மை நல்வரவேற்றுப் போற்றினர், ஆயினும் குருசந்நிதியை விட்டு வந்தமையைக் குறித்துச் சிறிது ஆயாசமும் உற்றனர், சிரவணாதிகள் செவ் வனே நடந்து வரவே, ஸ்ரீ சௌந்தரியநாயகியார் ஆட்கொள் ளத் திருவுள்ளம் வைத்தனள் போலும் ஒரு பெரும் வியாதி இத்தேகத்துற்றது, உற்ற சிறிதுகாலத்தில் ஸ்ரீ மகாமண்ட லேசுரர் திருக்களரிறைவராகிய தமது ஆசிரியர் கைங்கரியத் திறங்கி நிற்கவேண்டி வரப்பிரிவுற்றேம். உற்றசின்னாட்குள் உள்ளம்குருசந்நிதியை உள்ளி உருகி நிற்ப வியாதியும் துன் புறுத்த, அக்கால் ஸ்ரீ ஆண்டவர் சந்நிதியில் ஞானசிரியராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதண்ணாமலை ஞானதேசிகரது திரு

வாணைப்படி முன்போன்றே குருசந்நிதியில் வந்து சேர்ந்தேம். வியாதியுங் குணமாயதுகண்டு உளங்களித்திருக்கும் வேலே, நமது பிள்ளைத்தமிழாசிரியர் சிலசிலபோது அங்குவந்து தங்கிச்சிரவணாதிகள் நடத்திப்போவதுண்டு, அவ்வமயம் ஸ்ரீ சௌந்தரியநாயகி மகா வாக்கியப்பொருளைச் செய்யுள்வடிவமாயருள அவர்களும் அம்பிகை திருவருளை வியந்து கூற, யாமும் அம்பிகையின் பேரில் ஏதாவது பிரபந்தஞ்செய்தருள வேண்டுமென்றிரப்ப ஒரேதினத்தில், பொருள்வை ஸ்ரீ சுவர்ணபுரீசுரர் ஸ்ரீ சௌந்தரியநாயகியந்தாதியும், தமதுபாசனை மூர்த்தமும் ஸ்ரீ உகந்த ஞானதேசிகர் உபாசனாமூர்த்தமும் ஆகியிலங்கும் ஸ்ரீ செல்வவிநாயகர் செம்பொன்மணிமாலையும் மறுமறுதினத்திற் செய்தருளினார்கள். அவற்றையாம் வெளிப்படுத்து முறைபிலச்சிற் பதிப்பித்து ஐந்து தினம் வரை சகல வைபவத்துடனும் ஸ்ரீ சுவாமிகளைக் கொண்டே ஸ்ரீ அம்பிகையின் சந்நிதியினும் ஸ்ரீ செல்வவிநாயகர் சந்நிதியினும் அரங்கேற்றிவைத்தேம், அந்நாண்முதல் நாட்கு நாளுயர்வும் மங்கலமும் அன்பு மின்பும் ஓங்கத் தொடங்கியது, தொடங்கவே, தேவியாருக்கும் ஜகந்நாயகர்க்கும் சில அன்பரைக் கொண்டு சில கட்டளைகளும் சில ஆபரண முதலியவைகளும் செய்ய முயன்றேம், முயன்றதுடன், ஸ்ரீ சிங்காரவேல் சுவாமிகட்குப் பிற்காலம் இவ்வாதீனத்தை நடாத்தி வந்த ஸ்ரீ சட்டையப்ப ஞானதேசிகரும் ஸ்ரீமுத்தைய ஞானதேசிகரும் பெருமுயல்வுடன் திருத்தி யமைத்த மடாலயத்தையும் புதுக்கி நிர்மித்த குருவாலயத்தையும் அடியவர் மகேசுர பூசைக்காகத் தேடிவைத்த பூஸ்திதியையும், சீர்திருத்தியும் உத்தாரணம் புரிந்தும் விருத்தியாக்கியும் வந்தேம் வருகின்றேம். வருமொரு போது நமது ஸ்ரீ மகாமண்டலேசுரர் ஆங்கெழுந்தருளி, மடாலயத்தில் நெடுநாட் சிரவண

மிலாதிருப்பது அலங்காரமன்றென்றருளி ஸ்ரீ மாரிமுத்து ஸ்வாமிகளையும் எம்மையும் வைத்துக்கொண்டு ஆங்குச் சரணடைந்திருந்த அடியவர்க்கு நாறு ஜீவவாதக்கட்டளையை யாரம்பித்துத் தாமே முதனாள் உபதேச பாடஞ் செய்வித்து மறுநாண்முதல் எம்மை யுபதேச பாடம் நடத்தி வரும்படி ஆஞ்ஞாபித்துச் சென்னைக்கெழுந்தருளிய பின் ஸ்ரீ மாரிமுத்து சுவாமிகளின் றிருவாணையையும் மேற்கொண்டு இடைவிடாமல் உபதேசபாடம் ஸ்ரீ ஆண்டவர் சந்நிதான முறைப்படி நடாத்தி வருகின்றேம், இப்போதும் கைவல்ய நவநீதமும் ஸ்ரீ கருணாநிதி திரட்டி யருளிய ஸ்ரீ பாகவதத்திரட்டும் நடந்து வருகின்றன. இனிமேலும் இன்னணமே நடத்தியருளுமாறு குருவையும் இறைவனையும் இறைவியையும் பிரார்த்திக்கின்றோம். இஃதிவ்வாறாகத் திருப்பணி செய்யவேண்டுமென்று அரங்கேற்றுங் காலத்தாஞ்ஞாபித்த முறையை நினைந்துநிற்ப, அகஸ்மாத்தாகத் தம்பதியுடன் இங்கு தரிசன நிமித்தம் வந்து வசித்துக் கொண்டிருந்த நா. வ. மெய்யப்ப செட்டியார் மனத்தில் அம்பிகையவரை யாட்கொள்வான் புகுந்ததுபோற் புகுந்து திருப்பணிக்காக 60000, அறுபதினாயிரம் ரூபாய் சிங்கப்பூர்க் கடையில் வாங்கிக்கொள்ளும்படி செய்து வைத்ததைக் கண்டகமகிழ்ந்து திருப்பணி தொடங்கி நடத்திவரப்பணம் போதாததாக மீண்டும் நா. வ. மெய்யப்ப செட்டியார் வசிக்கும் காரைமாநகர்க்கேக அவரும் தமக்குச் சொந்தமான அநேகந் தனவைசியரைக்கொண்டு மீண்டும் 15000, பதினையாயிரம் ரூபாய் தரவைத்தனர், அதுவும் போதாததாக, ஆங்கேயுறையுநாள், அவனாயே திரவியப்பொருட்டுப் பின்பற்றுமாறு நேர்ந்தது, நேரினும் அவர் அதற்கிணங்காதது போன்றறைவதுடன் எம்மைப் பிரயாணமாமாறும் துரிதப்

படுத்தினர், படுத்தவே என்னசெய்வதென்று தோன்று மல் தொடங்கிய திருப்பணி நலம்பெறுமாறென்னவென அம் பிகையைத் தியானித்திருப்பத் தேவியும் அவர்மேல்வைத்த தயையால் ஒரு திருவிளையாடற் புரிந்ததும் புதுமையே, என்னே ? எம்மைப் பிரயாணப்படுத்தவந்த ஷை செட்டியார் தம்மைமறந்து ஒரு உண்டியலும் எழுதி யெமக்குத்தந்தார், தரும்வரை யெவ்வாறுமோவெனத் தேவியாரைச் சிந்தித்துக் கொண்டிருந்த எம்முள்ளமுவப்பத் திருப்பணிக்காக அவ் வுண்டியலில் ரூபாய் 10000, பதினயிரம் தரப்பெற்றிருந்தது. என்னே தேவியின்திருவருளென்று அவர்க்காசி கூறி இருக் கைக் கெய்தித் திருப்பணியை நடாத்திவருகின்றேம். ஸ்ரீ சொர்ணபுரீசுரர்க்கு, கர்ப்பக்கிரகம், அர்த்தமண்டபம், மகா மண்டபம், சோபனமண்டபம், நீராழிமண்டபம், நந்திமண் டபமும், ஸ்ரீ செளந்தரியநாயகிக்கு கர்ப்பக்கிரகம், அர்த்த மண்டபம், மகாமண்டபமும், ஸ்ரீ கணேசர் ஸ்ரீ கந்தர், ஸ்ரீ சோமாஸ்கந்தர், ஸ்ரீ இலக்குமி தேவியார் ஸ்ரீ துர்க்கா தேவி யார் தமக்கு தனித்தனியே கருங்கல்லால் ஆலயங்களும், ஸ்ரீமந் நடராஜ சபையும், குடவறையும் மடப்பள்ளியும், திருமதிலும், திருமாளிகைப்பத்தியும், கோபுரங்களும் ஸ்ரீ செளந்தரியநாயகியாரது தெய்வத்திருவருளால் சிற்பசாஸ் திரப்படி நன்கமைக்கப்பெற்றிருக்கின்றன. அல்லாமலும் ஸ்ரீ தேவியாரது சந்நிதியின்றென்பால் பன்மலர் நல்கும் நந்தன வனமும் பசுபதியாகிய எம்பெருமானது சந்நிதியின் கீழ்புரம் பசுமடமும் நவமாயமைக்கப் பெற்றுள்ளன.

இன்னும் ஒருவருடத்திற் பூர்த்தியாம், மகா கும்பாபிடேக சமாப்திவரை 100000 இலக்ஷம் ரூபா யின்னும் வேண்டும். ஸ்ரீ இலக்குமிதேவிக் கநுக்கிரகஞ் செய்த

ருளிய ஆலயமிது வாதலின் சந்நிதிவிசேடத்தால் யாவும் பூரணமாகக்கைகூடி முற்றுறுமென்பதே யம்பிகை யருளான் மனத்துணிபாம். நினையாதிருப்பினும் முன்வந்து நிற்கும் எனையாளும் ஈசன்செயலென்பதையும், அநேக முறை கண்டேம். இப்போது முன்போலவே அதிகமாகவே சிவாலய் பூசை கட்டளை முதலியவையும் குருமூர்த்திகளின் பூசை முதலியவையும், சிரவணாதிகளும் ஊரிற் பிரஜைகளின் க்ஷேமாதிகளும் மேலும் மேலும் விருத்தி யாகிக்கொண்டே வருகின்றன. இக்கோலாகலத்தில், ஸ்ரீ மகா மண்டலேசுரர்களாகிய நமது சுவாமிகள் திருவாரூரில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடாலயத்தில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியாக எழுந்தருளி யிருப்பதைக்கேள்வியுற்று அடியார்களுடன் அங்குச்சென்று தரிசனஞ் செய்து நடந்துவந்தயாவற்றையும் தெரியப்படுத்தி, முன்னந்தாதியும் மணிமாலையும் செய்தருளிய வைபவமே இத்தொடக்கமாதலின் இது முட்டின்றி முடியுமாறு அம்பிகையின் பேரில் ஒரு பிள்ளைத் தமிழ் இயற்றியருளவேண்டுமென்று பிரார்த்திப்ப, ஸ்ரீ சுவாமிகளும் விரைவில் அநேக அம்பிகை சரிதாமிர்தங்களை நிறைத்துப் பாடிமுடித்துத் தந்தருள அச்சுவாகனமேற்றி நண்பர்கள் நல்விழி காணுமாறு தந்தோம் யாவரும் பாராயணஞ் செய்து பேரானந்தப் பெரும் பதவியை யடையுமாறு திருவருளைச் சிந்திக்கின்றோம்.

இங்ஙனம்

மெய்யப்பஞான தேசிகர்,
கோ. ஆ. பெரியமடம்,
போருள்வைத்தசேரி, சிக்கல்.

ஸ்ரீ குருமுறையும் திருவாலயமும் முற்றுப் பெற்றது.

